31st January 1961]

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) During 1959 and 1960 nine Dental Clinics have been opened in the District Headquarters Hospitals at Vellore, Cuddalore, Coimbatore, Ramanathapuram, Salem, Thanjavur, Tiruchirappalli, Chingleput and Nagercoil.

(*b*) The scheme for the establishment of Dental Clinics is eligible for Central assistance at fifty per cent of the recurring expenditure and seventy-five per cent of the non-recurring expenditure on equipment alone.

SRI M. K. SOMASUNDARAM : ஸார், கிராமங்களுக்குச் சென்று பல் வைத்திய சிகிச்சை செய்ய வாகனங்கள் மூலம் நடத்தப்பட்டு வந்தது, இப்போது நல்லமுறையில் நடைபெற்று வருகிறதா? இதை எல்லாம் கிராமங்களுக்கும் விஸ்தரிப்பதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கிறதா?

THE HON. SRI M. A. MANICKAVELU : இது நன்றாகத்தான் நடந்து வருகிறது. ஆனால் இதற்காக இருக்கின்ற வாகனத்திற்கு அடிக்கடி கோளாறு ஏற்பட்டு விடுகிறது. அந்த வாகனம் ஒரு பிரமாண்டமானது. அது ஒரு தேசத்திலிருந்து நமக்கு நன்கொடையாகக் கிடைத்தது. இதைத்தவிர வேறு எல்லாம் சரியாக நடைபெற்றுக்கொண்டுதான் வருகிறது.

*Handloom goods*

* 314 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தில் ஸான்போரைஸ்டு கைத்தறித் துணி உற்பத்தி செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதா? எங்கே? எப்போது?

(இ) இதன் மூலம் எதிர்பார்க்கப்படும் அனுகூலங்கள் என்ன?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) The Madras State Handloom Society has proposed to instal one EVASET processing plant to secure similar results as under " Sanforisation ". The matter is being pursued.

(இ) The quality and finish of handloom goods can be improved by the use of this process.

SRI A. VEDARATHNAM : இந்த ரகத் துணிகளுக்கு வெளி நாட்டில் நல்ல கிராக்கி இருக்கிறது அல்லவா? அப்படியிருக்குமானால் அதை அபிவிருத்தி செய்வதற்கு அரசாங்கம் என்ன முயற்சி எடுத்திருக்கிறது?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த ரகத் துணிகளுக்கு உள்நாட்டிலேயே நல்ல கிராக்கி இருக்கிறது. அதற்காக ஒரு பிராஸஸிங் மிஷின் வைக்கவேண்டும் என்று ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறோம். இதன் மூலம் எப்படி வேலை செய்வது, இதன் மூலம் அபிவிருத்தி செய்யப்பட்ட துணிகள் எப்படியிருக்கிறது என்பதைப்பற்றியும் பரிசீலனை செய்து கொண்டிருக்கிறோம்.

SRI K. VINAYAKAM : Sir, may I know whether this process is applied by the private sector?

THE HON. SRI R. VENKATARAMAN : By the co-operative sector.

*Vaigai Project*

* 315 Q.—SRI T. S. RAMASWAMI (on behalf of SRI N. R. THIAGARAJAN): கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா வைகை அணைக்கட்டில் உள்ள கட்டிடங்களை யாவும் இடித்துத்தள்ளப்போவது உண்மையா?

(இ) வேறு வழியில் அந்தக் கட்டிடங்களை உபயோகிக்க முடியாதா?

THE HON. SRI P. KAKKAN : (அ) & (இ) No, Sir. Only such of those temporary buildings constructed with cheap materials for the execution of the project, as were found uneconomical and unsafe and cannot be retained for any other use, are dismantled. The remaining buildings are put to the best use possible.

*Well subsidy scheme*

* 316 Q.—SRI K. VINAYAKAM (on behalf of SRI S. M. ANNAMALAI) : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கடன் மான்யத் திட்டத்தின்கீழ் கிணறுகள் வெட்டுவதற்கு சமுதாய நலத் திட்டப் பகுதிகள் அல்லாத இடங்களுக்குத் தான் பணம் தரப்படுகிறது என்பது உண்மையா?

(இ) அப்படியாயின், அதற்கான காரணங்கள் யாவை?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) & (இ) The intention is that the scheme should be implemented mainly in the non-block areas, but the funds available under the scheme will also be utilised by the Block Development Officers after they have exhausted the provision under "Irrigation and Reclamation" in the Block Budget. When this provision is exhausted, the Block Development Officers will forward the pending applications to the Tahsildar concerned with a certificate that the allotment in the Block budget for the purpose has been exhausted. These applications will then be dealt with as under the New Well Subsidy Scheme.

SRI M. K. SOMASUNDARAM : ஸார், இன்னும் கிராமங்களில் இந்த மாதிரி கிணறுகள் வெட்டுவதற்கு லோனை கொடுக்க முடியாது என்று மறுக்கிறார்கள். ரீ செட்டில்மென்ட் முடிந்த இடத்திலாவது இம்மாதிரியான லோன் கொடுப்பதற்கு அரசாங்கம் முயற்சி எடுக்குமா? அல்லது உடனடியாக தற்காலிகமாக பட்டா கொடுப்பதற்காகவாவது அரசாங்கம் முன் வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்கு தனிக் கேள்வி வேண்டும்.